உ
சிவமயம்,

# "துறவி"

1957

| துன்முகி மலர் 2 | திங்கள் வெளியீடு. | சித்திரை இதழ் 4 |
|---|---|---|






## தமிழ் நாட்டுத் துறவிகள் சங்கம்,
## திருவண்ணாமலை.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றினை
பற்றுக பற்று விடற்கு"

பதிப்பாளர்:
**சுவாமி சொரூபானந்தா**

ஆண்டுக் கட்டணம் ரு 2/- தனி இதழ் அணா 3/-

ஓம்.

# "துறவி"

## பொருளடக்கம்.



இதழின் அட்டை முகப்பில்:

| | | |
|---|---|---|
| அப்பற்றினே | - | பிழை |
| அப்பற்றைப் | - | திருத்தம் |

ஓம்.

# “துறவி”


| துன்முகி மலர் 2 | தமிழ் திங்கள் வெளியீடு. | சித்திரை இதழ் 4 |
|---|---|---|


### கடவுள் வாழ்த்து.

பண்டு செய்த பழவினை யின்பயன்
கண்டுங் கண்டுங் களித்திகா ணெஞ்சமே
வண்டுலா மலர்ச் செஞ்சடை யேகம்பன்
றேண்ட ஞய்த்திரி யாய்துயர் தீரவே.

## புத்தாண்டு.

இன்று புதிய ஆண்டின் தொடக்கம் ஆகும். இந்நாளை தமிழ் மக்களாகிய நாம் பெரிதும் கொண்டாடுகிறோம். கொண்டாடுவதோ டமையாது இப்புனித நாளில் நாம் ஒவ்வொருவரும் ஓர் உயரிய செயலை மேற்கொள்ள வேண்டும். தமிழரசொழிந்த தண்டமிழ் நாட்டிலே இன்று தமிழனின் பண்பாடுகளெல்லாம் மறைந்தன. அவ்வளவினமையாது கொண்டதே கோலம் கண்டதே காட்சி என்ற அடிப்படையில் அநாகரீகம் தாண்டவமாடுகின்றது. செய்வன தவிர் வன இன்னதென்றுணரவே சூழ்நிலை இடந்தரவில்லை. என்செய்வது இம்மயக்கம் நீங்கவேண்டும். நிலையற்ற பொருள்களில் வீணே பற்று வையாது என்றும் நிலைபேராயுள்ள பேரானந்தப் பெருவாழ்வில் திளைக்க வேண்டும். இதுதான் மக்களாகப் பிறந்த நாம் எய்தும் பேருகும். இப்பேற்றினை அடைய (உணர) வேண்டுமோயின் எல்லாம் வல்ல முழுமுதற் பொருளாகிய இறைவனை அன்போடு நீரும் பூவும் கொண்டு, சமயாசாரியர்களும், ஞானிகளும், புகழ்ந்து பாடிய தமிழ்ப் பாக்களை இசையோடு பாடி, ஐந்தெழுத்தை மனத்தாலும் வாக்காலும் எண்ணி நலந்தீங்கிலும் விடாது வழிபட வேண்டும், வழிபடுவோமாக. இதுவே புத்தாண்டின் புனிதத் தொண்டாம்.

“முன்னை நான் செய்த பாவ முதலறப்
பின்னை நான் பெரிதும் மருள் பெற்றதும்
அன்ன மார்வயற் கோழம்பத் துள்ளமர்
பின்னல் வார்சடை யானைப் பிதற்றியே—என்பது

நமது திருநாவுக்கரசர் திருவாய் மலர்ந்தருளிய தேவாரம்.

# பிறவியைப் பழித்தல்.

**தவத்திரு. சுவாமி அருணகிரிநாதரவர்கள்**
(நாராயணதேசிகர் நிலையம், சென்னை.)

முன் (ம 2 இ 3 ப 64) தொடர்ச்சி

மாணவன்—ஏ, குருநாதா உலகில் தோன்றிய நாள் முதல் இது காறும் கண்டதையே கண்டும் உண்டதையே உண்டும் உடுத்ததையே உடுத்தும் முடித்ததையே முடித்தும் பூசியதையே பூசியும் முயங்கியதிலே மீண்டும் முயங்கியும் வந்தாயே யல்லது, நல்லதவமும் ஞானமும் கைவரப்பெற்ற பெரியோர்களால் அடையப்பெறுவதாகிய பேரின்ப சுகத்தை நீ அடையவில்லையே. அதற்கான சாதனங்களை யடையும் வழியில் ஈடுபடவுமில்லையே என்றீகள் அதற்காக நான் எவ்வளவோ பாடுபட்டிருக்கிறேன் என்பதை நீங்கள் அறிவீர்களா!

குருநாதன்—ஏ மாணவ! அறிவேன், ஏதுகருதி எவை எவை எல்லாம் செய்தாய் என்பதனை விளக்கமாக எடுத்துரைக்கின்றேன் அமைதியோடு கேட்பாயாக!

ஏ! மாணவ! கெங்கை, யமுனை, சரஸ்வதி, கோதாவரி, நர்மதா, சிந்து, காவேரி, துங்கபத்திரா, தாமிரபரணி முதலிய புண்ணிய நதி நதங்களிலும், கடல்களிலும், மகாமகக்குளங்களிலும், திவ்விய தீர்த்தங்கள் நிறைந்த இராமேஸ்வரம் முதலிய இடங்களிலுள்ள கிணறுகளிலும் விதிக்கப்பட்ட காலங்களில் மந்திர பூர்வமாக ஸ்நானஞ்செய்தாய். ஒரு நாட்கூடத் தவறாமல் நல்ல நோன்புகள் (விரதங்களை) அநுட்டித்தாய் திட்சை பெற்று மந்திர உபதேசங்களைப் பெற்று தனது இட்ட தேவதையை அன்போடு பூசனை செய்தாய். காசி, கயா, பிரயாகை, ரிஷிகேசம், கேதாரம், பத்திரிநாராயணம், பிரம்மகபாலம், மானசரோவரம் மற்றும் கோகர்னம், பண்டரிபுரம், பூரிஜகந்நாதம், காளத்தி திருப்பதி, திருவண்ணுமலை, சிதம்பரம், திருவரங்கம், பழநி, மதுரை, இராமேஸ்வரம், தனுஷ்கோடி, திருச்செந்தூர், கன்னியாகுமரி ஈறாக அநேக இறைவர் திருத்தல யாத்திரைகள் செய்து வந்தாய். புலித்தோல், மான்தோல், முதலியவைகளை விரித்து அதன்மேல் பதுமாசனம், வீராசனம், கோமுகாசனம், முதலியவைகளைப் போட்டும் கழுத்தில் உருத்திராக்கம், படிகம், துளபமணி முதலியவைகளை அணிந்தும் இருமாப்பாக நிமிர்ந்திருந்து இருகண்களையும் மூடி பல விதமான யோகாப்பியாசங்களை செய்தாய் எதற்காக? எதனையடையும் பொருட்டு? நல்ல மாளிகை, அழகிய மனைவி, மக்கள் மிகுதியான செல்வம், நோயணுகாத உடம்பு, அணிமாதி அஷ்டசித்திகளாகியபயன்

களைப்பெற்று நீண்டநாள் வாழவேண்டுமென்பதற்கே யல்லாமல் இக லோக பரலோகங்களில் அநுபவிக்கும் இன்பவாழ்வுகளும் செல் வங்களும பந்தத்திற்கு எதுவாயதாதலால் அவைகளனைத்தும் என்னை விட்டு நீங்கி பிறப்பும் இறப்பும் ஒழிந்து பேரானந்தப்பெருவாழ்வைப் பெறவேண்டும் என்ற எண்ணத்தோடல்லவே இவைகளை எல்லாம் நீ செய்தது? ஆகவே இதனல் என்ன பயன். இகலோக பரலோக இன் பங்கள் அழியாத இன்பமல்ல அழிந்து போவனவாம் என மறைக ளெல்லாம் கூறுகின்றதே, இகலோகத்திலும் பரலோகத்திலும் உள்ள உடம்புகளும் அதனலடையும் வாழ்வுகளும் அளவில்லாமல் நீங்கி விட்டனவே அவைகளை அறிந்திருந்தும் மீண்டு மீண்டும் அதனையே அடைய விரும்புகின்ற உன்னுடை எண்ணமும அறிவும் எத்தகைய தாம் என சிந்தித்துப்பார்.

## மேற்கோள் ("அநுபவா நந்த தீபிகை")

நதிகடல் வாவிகள் விதியி லமிழ்ந்தனே நாள்தவ ராமல் நீயோர்
நன்னேம் போமபினே மந்திரபூசை நயந்து முடித்தனைபல்
பதிவலம் வந்தனே புலிமான் தோலிடை பன்மணி பூண்டிருமாப்
பாக விருந்திரு கண்களை மூடிப் பயின்றனை யோகுகளை
பதிசதி நிதிசுதர் உடலணிமாதி பயன்பெற வேண்டி யலாற்
பாழ்பட இகபர வாழ்வுடன் நிதியெனப் பவமறுதற்கலவே
இதிலெது பயனிக பரசுக நிலையல வெனுமிகுமறை யுடல்வாழ்வு
எண்ணில் கழிந்த தறிந்ததை வேண்டுவை என்னிது வுன்னினைவே

(தொடரும்)

### குறிப்பு.

"துறவி" என்னும் திங்களிதழில் வெளியிட கட்டுரை எழுதியனுப்பும் துறவிகள் நல்ல கடிதத்தில் தொடர்பு எழுத்தில்லாமல் எழுத்துக்களை நன்கு தெரிந்து கொள்ளும்படி தனித்தனியாக ஒவ்வொரு கடிதத்திலும் ஒரேபக்கத்தில் எழுதி ஒவ்வொறு தமிழ் மாதம் 15உக் குள் அனுப்பிவைக்கும்படி வேண்டுகின்றோம்.

சைவசித்தாந்தம்

# சிவஞானபோதம்.

தவத்திரு. திருநீ. சண்முகாநந்த சுவாமிகள்,
(கலைமகள் தமிழ் நிலையம், மதுரை.)

முன் (ம 2 இ 3 ப 68) தொடர்ச்சி.

அற்றேல், பதி, மனைவி முதலிய பொருள்களைத் தன்னிற் பிறிதாகக்கண்டு பிறிதின்கிழமைப் பொருளாக எனதென்றாற் போலக் கைகால் முதலியவற்றை தன்னிற் பிறிதாகக் காணமல் *தற்கிழமைப் பொருளாக எனதென்று கூறுகின்றமையின் அவை தம்முள் ஒக்குமாறு எங்ஙன் எனின்:— தேகான்ம நூல் கேட்டுத் தெளியாதார், பதி, மனைவி முதலிய புறப்பொருளையே ஆன்மாவெனக்கண்டு மயங்கி நின்று அக்காலத்து அவற்றை எமதன்றெனப் பிறிதாகக் காணுது தனித்தனியென தென்றே தற்கிழமைப் பொருளாகக்கூறி நின்றாற்போல, ஆன்மாவினதன்றாகிய கை, கால் முதலியவற்றைத் தனித்தனி யெமதென்றும் அங்ஙனமறிந்த பாசவறிவை யெம்மறிவென்றும் தற்கிழமைப் பொருளாகக் கூறு நிற்பர். அந்நூல் கேட்டுத்தெளிந்தோர், பதி, மனைவி முதலிய பொருள்கள் தம்மிற் பிறிதாதலையுணர்ந்து தம்முடம்பே ஆன்மாவெனக் கண்டாற்போலக் கைகால் முதலியவற்றின் இயல்புகளையும் ஏதுக்கள் முதலியவற்றான் ஆராய்ந்து பார்ப்பாராயின் அக்கைகால் முதலிவையும் தமக்கன்னியமாம் என்பதனைத் தெளிந்துணர்ந்து கொள்வர். இதனை,

"எனதென்ற மாட்டி னெனதலா தென்று
துனதலா துன்கைகால் யாக்கை—யெனதென்று
மென்னறிவ தென்று முரைத்துநீ நிற்றிகா
ணுன்னிலவை வேரு முணர்."

எனவரும் மெய்கண்டதேவநாயனர் திருவாக்கானும், "உடலின் வேறுயிரேனிந்த வுடலன்றோ வுணர்வதென்னில் — உடல் சவமான போது முடலினுக் குணர்வுண்டோதான்" எனவருஞ் சித்தியாரானும் "குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே — யுடம்போடுயிரிடை நட்பு" எனவரும் பொய்யாமொழியானு முணர்க. ஈண்டு எடுத்துக்காட்டிய பொய்யாமொழியில் 'நட்பு' என்றது குறிப்பு மொழியாய் நட்பின் றிப்போதலை யுணர்த்தி நின்றமையின், சேதனமாய் அருவாய் நித்தமாய ஆனமாவும். அசேதனமாய் உருவாய் அனித்தமாயவுடம்பும் தம்முள் மாறுகலின் வினைவயத்தாற்கூடிப் பிரியுமென்பது போந்த

வாறு முணர்ந்து கொள்க. மூன்ரும் அதிகரணம். "ஐம்புலன் அறிதலின் ஆன்மாவுளது" எனவரும். அறிதலின் என்பதை ஈண்டும் கூட்டிக்காண்க.

மேலையதிகரணத்துத் தேகான்மவாதிகளை மறுத்து, ஆன்மா வேறுண்டெனச் சாதித்தவிடத்து, ஐம்பொறிகளும் ஐம்புலன்களையும் அறியுமென்றல் எம்மதத்தார்க்கும் உடன்பாடாகலானும், அவை உடல்போன்று சடமல்லவென்பது பெறப்படுதலானும், அவையே ஆன்யாவாதல் பொருந்துமென்னும் இந்திரியான்மவாதிகளை மறுத்தற் கெழுந்தது இவ்வதிகரணமாம். என் சொல்லியவாறோவெனின்:— ஐம்புலன்களாகிய சுவை, ஒளி, ஊறு, ஓசை நாற்றங்களை வாய் முதலிய இந்திரியங்களுள் ஒரு புலனையறிந்த இந்திரியம் மற்ருெரு புலனையறியாதாதலான், இவ்வைந் திந்திரியங்களாலும் ஐம்புலன்களை யும் அறியும் பொருளுண்டாகலான் அதுவே ஆன்மாவென்றவாரும்.

அற்றேல் இந்திரியங்களுள் ஒன்றறிந்ததைப் பிறிதொன்றறி- யாதென்பது ஒக்குமாயினும், இவ்வைந்தையுங் கருவியாகக்கொண்டு ஐம்புலன்களையும் ஒரு பொருளேயறியு மென்றற்குப் பிரமாண மென்னையெனின்:—உடம்பினிடத்தே நிலைபெற்று ஒருபுலனையறிந்த இந்திரியம் மற்ருெரு புலனையறியாததாய், அங்ஙனந்தம்முள் மாறு பாடுற்ற சுவை முதலிய புலன்களைச் சூக்கும பஞ்சாக்கரத்தாற் செலுத்தப்பட்டு ஆராய்ந்தறிகின்ற ஐந்திந்திரியங்களின் தொழில்களை யும் நாவிந்திரியம் சுவையாகிய புலனை யறிவதென்றும், கண்ணிந்திரியம் ஒளியாகிய புலனையறிவதென்றும், இவ்வாறுணர்கின்றதாகிய பொருள் வேறுளது. அஃதில்லையெனின் அவ்வறிவு நிகழாமையின் அப் பொருளே ஆன்மாவாம்.

அவ்வாறுணர்வனவும் அவ்விந்திரியங்களேயெனின்:—அவ்விந் திரியங்கள் தத்தம்புலன்களை வேறுவேறு கண்டறியுமேயன்றி, இத் தொழிலையுடையேம்யாம் என அறியமாட்டாவாகலான், அவ்வைந்திந் திரியங்களின் தொழில்களையுமறிந்து அவற்ருன் வரும் பயனைக்கொள் வதாய ஆன்மா அவற்றின் வேறெனவேயுணர்க. இதனை—

"ஒன்றறிந்த தொன்றறியா தாகி யுடன்மன்னி
யன்றும் புலனைய வஞ்செழுத்தை—யொன்றறித
லுள்ளதே யாகி லதுநீ தனித்தனிகண்
டுள்ளலவை யொன்றல்லை யோர்"

எனவரும் மெய்கண்ட தேவநாயனர் திருவாக்காலும்,

[82-ம் பக்கம் பார்க்க

# நட்டுவன் இல்லா நாட்டியம்.

(மன்றிறை யடிகள்)

திருச்சிற்றம்பலம்.

ஆட்டு வித்தா லாரொருவர் ஆடா தாரே
அடக்கு வித்தால் ஆரொருவர் அடங்கா தாரே
ஓட்டு வித்தால் ஆரொருவர் ஓடா தாரே
உருகு வித்தால் ஆரொருவர் உருகா தாரே
பாட்டு வித்தால் ஆரொருவர் பாடா தாரே
பணிவித்தால் ஆரொருவர் பணியா தாரே
காட்டு வித்தால் ஆரொருவர் காணா தாரே
காண்பார் ஆர் கண்ணுதலாய்க் காட்டாக் காலே.

திருச்சிற்றம்பலம்.

இது திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய திருத்தாண்டகம், உயிர்கள் பல. அவை இருட்கட்டாகிய ஆணவமலத்திலழுந்தி, இருவினைகளின் தன்மைக்கேற்றவாறு இறைவன் கட்டளைப்படி, உயர் திணையாயும் அஃறிணையாயும் கருதப்படும் உடம்புகளெடுத்து, அவை வாயிலாக அளவற்ற நுகர்ச்சியினை யுடையனவாய், அவற்றை நுகரு மாற்றானே மேலைக்கு வித்தாய இருவினைகளைப் புரிந்து, பிறப்பிறப்பிற் சுழன்று அநாதியே பொருந்திய ஆணவமலம் பக்குவப் படுங்காலம் வந்தபோது, முதல்வன் அருளால் பாச நீக்கம்பெற்றுத் தமது அறிவின் கண் விளங்கும் பதி ஞானத்தின் உதவியால் இறைவன் திருவடி அடையுந் தன்மையனவாம்.

அவை தன் வயமின்றி இறைவன் ஆணைவழி நடப்பன ஆதலின் ஆட்டுவிக்கவும், அடக்குவிக்கவும், ஓட்டுவிக்கவும், உருகு விக்கவும், பாட்டு விக்கவும், பணிவிக்கவும், காட்டு விக்கவும் தனக்கு மேலா மொரு இறைவனை வேண்டி நின்று அவன் காட்டுவிக்கக்காண் கின்றன என்னுங் கருத்தைத் தெளிவாக விளக்குகின்றது இத்திருப் பாடல்.

* நடனஞ் செய்வோன் பின்னின்று அவரை ஆட்டுவிப்போர்க்கு நட்டுவர் என்று பெயர்

இன்னும் சுருக்கமாகக் கூறின் சூத்திரப் (கயிறு) பாவை என்று கூறுவது பொருத்தமுடையது. தலைவன் எவ்வாறு அசைவிக்கக் கருதி கயிற்றை அசைத்திடுகின்றானோ அவ்வாறே அசைந்தாடும் பாவை போல, உயிர்களும் இறைவன் ஆணைவழி நின்று நிலவுகின்றன ஆதலின் என்க.

"நன்னாரிற் பூட்டிய சூத்திரப் பாவைநன் னார்தப்பி னால்
தன்னாலு மாடிச் சலித்திடு மோஅந்தத் தன்மையைப் போல்
உன்னாலிங் கியானுந் திரிவதல் லால்மற் றுனைப் பிரிந்தால்
என்னாலிங் காவதுண் டோஇறை வாகச்சி யேகம்ப னே.

என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கு இதனை நன்கு தெளிவுறுத்தல் காண்க.

இறைவன் உயிர்கள் போலப் பிறர் வயமுடையவனல்லன் தன்வயமுடையன். தன் வயமுடைமை, தூயவுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், இயல்பாகவே பாசங்களினிங்குதல் முற்றும் உணர்தல், பேரருளுடைமை என்னும் எண் குணங்களும் இறைவனுக் குரியவையாம்.

இறைவன் தன்வயமுடையவனாதலின் ஆட்டுவிப்பவரும் அடக்கு விப்பவரும் மற்றைய வற்றைச் செய்விப்பவரும் இல்லாமல் தாமே செய்பவன். அவனுக்குப் பிறர் காட்டாதிருக்கவும் தாமே காணும் ஆற்றலுண்டு.

இத்தகு பேராற்றல் படைத்தவன் இறைவன் என்பதை உயிர் கள் பொருட்டாக அவன் செய்யும் திருநடனத்தின் பால் வைத்து ஒரு ஆசிரியர் நமக்கு விளக்கிக் காட்டுகின்றார்.

நாட்டிலே நடைபெறும் நாட்டியங்களுக்கு நாட்டியம் பார்ப் போர் பலர் இருப்பர். அவரையன்றி மத்தளம் அடிப்போரும், தாளம் கொட்டுபவரும் வேறு வாத்தியம் ஒலிப்போரும் இருந்திடுவர். இன்னும் இவர்கள் அனைவரையும் விடுத்து அந்நாட்டியத்துக்கு நாட்டியம் ஆடு பவ்ரை ஆட்டுவிக்கும் நட்டுவனார் ஒருவரும் இன்றியமையாது வேண் டப்படுதலின் அவரும் ஒருவர் இருந்து நடிப்போரை நடிப்பிப்பர்.

இறைவன் ஆடும் நாடகத்துக்கும் இவ்வங்கங்களில் எவை எவை உள்ளன என்பதை ஆராய்கின்றார் அப்பெரியார்.

| | | |
|---|---|---|
| மத்தளம் அடிப்பவர் | —— | திருநந்தி தேவர் |
| தாளம் கொட்டுபவர் | —— | பிரமதேவர் |
| காண்போர் | —— | சேரனும் சோழனும் |
| நடிப்பிக்கும் நட்டுவனார் | —— | இல்லை |

மேற்குறித்த கருத்தினையே அடியில் வரும் பாடல் விளக்குகின்றது.

## கட்டளைக் கலித்துறை.

நட்டுவ னாரை யறிகிலன் தண்ணுமை நந்தி நின்று
கொட்டுவ னாரை யிரைதேர் கயமுது குன்றுடை யாய்
தட்டுவ னாரை யகலாத நான்முகன் தாளம் உயர்
குட்டுவ னாரை வனைவான் பரவுநின் கூத்தினுக் கே.

| | | |
|---|---|---|
| நட்டுவன் | =நடிப்பிப் போன் | உயர்குட்டுவன் = சேரன் |
| தண்ணுமை | =மத்தளம் | |
| நந்தி | =திருநந்தி தேவர் | ஆரைவனைவான் = ஆத்தி மாலை சூடிய சோழன் |
| நாரையிரை தேர்கயம் = | நாரைப் பக்ஷிகள் இரைதேடியுண்ணும் குளம் | |
| ஆரையகலாத நான்முகன் = | அன்பினை விட்டு நீங்காத பிரமதேவர் | கூத்து = திருநடனம் |

இதனானே இறைவன் பிறர்வய மின்றித் தன் வயமுடையவன் என்பதை விளக்கிக் கூறியிருத்தல் காண்க.

---

79-ம் பக்க தொடர்ச்சி

"அறிவதைம் பொறியேயென்னி னுறக்கத்தி னறியாவாகு
மறிவது மொன்றென்றாக வொன்றென்று யறியுமென்னி
னறிவுக ளொன்றையொன்றங் கறிந்திடா வைந்தையுங்கொண்
டறிவதொன் றுண்டதான்மா வைம்பொறி யறிந்திடாவே."

எனவருஞ்சித்தியாரானுங்கண்டுகொள்க.

மேலும், ஐம்புலன்களையும் இன்ன இன்ன இடத்திற் செலுத்தல்கூடும். இன்ன இன்ன இடத்திற் செலுத்தல் கூடாது என்று உய்த்துணர்ந்து தேர்ந்த ஞானிகளது சொற்படி உலகத்தார் நடப்பர், என்னுங் கருத்தையுந் தன்னுள்ளே கொண்டுள்ள "சுவையொளி யூறோசை நாற்றமென்றைந்தின்—வகைதெரிவான் கட்டேயுலகு" எனவரும் பொய்யாமொழி யானுமுணர்க,

(தொடரும்)

# துறவு.

## தவத்திரு. ஐயாறு அடிகள்

(சித்தபாலைய தேசிக ஆதீனப்புலவர், பழநி.)

முன் (ம 2 இ 3 ப 72) தொடர்ச்சி.

மதுர கவியாழ்வார் நம்மாழ்வார் என்ற பெயரைச் சொல்லியே இன்பமெய்தினர், "நாவினால் நவிற்றின்பமெய்தினேன்" என்பது மதுர கவியாழ்வார்வாக்கு. நம்மாழ்வார் உவப்புக்காகத் திருமாலைச் சேவிப்பேன் என்று கூறினர் மதுரகவியாழ்வார். நம்மாழ்வாரையே கடவுளாகக் கண்டார். துறவு நிலை கைவந்தவர்கள்தாம் உண்மை உணர்தல் கூடும். காலத்தினாலும், இடத்தினாலும், ஏனைய பொருள் களாலும் கண்டிக்கப்படாத பொருள் எதுவோ அதுவே உண்மைப் பொருள். உண்மைப் பொருளல்லாத ஏனைய பொருள்களை உண்மை என்பதாக உணருகின்ற மயக்கத்தாலே மாண்பில்லாத பிறவிகள் உளவாம். பிறந்து பிறந்து இறத்தலே நலமென்று கருதுபவர்கள் மெய்ப்பொருள் அல்லாதவற்றை மெய்யென உணர்ந்து மயங்கலாம், மயக்கம் நீங்கவேண்டும், நீங்கவே மாசற்ற உண்மையுணர்வு உண்டாம் உண்டாகவே அறிவின்மையாகிய இருள் நீங்கும். அறியாமையாகிய இருள் நீங்கவே என்றும் நிலைத்ததாகிய பேரின்பம் உளதாம். உண்மைப் பொருள் இதுவோ அதுவோ என்னும் ஐயப்பாடு நீங்கித் தெளிதல் வேண்டும். தெளிந்தவர்க்கு மேல்நிலை நணியதாகும். கீழ் நிலை சேய் மையதாகும். சிறந்த அறிவினையடைந்தாலும் உண்மைப் பொருள் உணர்வில்லாதவர்க்கு யாதொரு பயனும் உண்டாகாது

எப்பொருள் எத்தன்மையதாகத் தோன்றினும் அப்பொருளின் மெய்மையினைக் காண்டலே தூய அறிவு.

அறிவு நூல்களைக் கற்கவேண்டும். ஆராய்ந்து மேன்மை மெய்ம்மையைக் காணல் வேண்டும். இங்ஙனம் கண்டவர்கள் தாம் பிறவாநெறியினைப் பெறுவர், ஒருவனதுள்ளம் ஆராய்ந்து உண்மை உணருமானால், உணரும் ஒருவற்குப் பிறப்புண்டாகா தென்பது உறுதியே, பிறப்பு நீங்கவேண்டுமேல், இதுதான் சிறப்புடையதெனப் படும் செம்பொருளைக் காண்டல் வேண்டும். இங்ஙனம் காண்பது தான் அறிவு. பொருள் என்ற சொல்லுக்கு

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு". —என்னும்

குறட்பாவினுள்ள "பொருள்" என்ற சொல்லுக்கு "மெய்மை" என்று பொருளுரைத்தார் பரிமேலழகர், செம்மை—பொருள், செம்பொருள்

என்றுயது. செம்மை, நேர்மை, மங்கலம் என்பன ஒரு பொருட் சொற்கள். நமது திருநாவுக்கரசர், செம்பொருளேயே பற்றி நின்ற சிரியராவர். "சிவனெனு மோசையல்ல தறையோ உலகில் திருநின்ற செம்மையுளதே" என்று திருநாவுக்கரசர் அறை கூவினமைகாண்க. "சிவனெனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்" என்று பொது தனிவிருத்தத்தில் அருளியதுங் காண்க நமது திருநாவுக்கரசர் சுந்தரமூர்த்திகளால் திருத்தொண்டத் தொகையில் "திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்ட திருநாவுக்கரையன்றன் அடியார்க்கும் அடியேன்" என்று பாராட்டிப் போற்றப் பெற்றமை காண்க. செம்மை—பண்பு, பொருள்—பண்பி, செம்மைப் பண்புடையது செம்பொருள். செம்மையாகிய மேனியுடையது, செம் பொருள். முதற்காலத்திலே சேய், சேயோன், முருகன், என்பன வாதிய பெயர்களே கடவுளுக்கிட்டு வழிபாடு செய்தனர் நமது முன்னோர். "சேயோன் மேய மைவரை யுலகம்" என்றார். ஆசிரியர் தொல்காப்பியனார்.

ஒவ்வொருவரும் பிறவாமையினையே வேண்டுதல் வேண்டும். பிறவியினால் துன்பங்கள் பல உளவாமாதலின் "பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே" என்று தொண்டரடிப் பொடியாழ்வார் திருவரங்கநாதனை வேண்டினமை காண்க. பிறவியின்மை யாதொன்றனையும் வேண்டாமையை வேண்டின் தானே வந்து எய்துவதாகும்.

"வேண்டுங்கால் வேண்டும பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்" —திருக்குறள்

அவா அறுத்தல்.

யாதொன்றனையும் விரும்பி வேண்டாமையே விழுச்செல்வம் இதுபோன்று சிறந்த செல்வம் இவ்வுலகில் பிறிதில்லை. அவ்வுலகத்துமின்றும். துன்பங்கள் பலவுளவாம் அவாவென்பது துன்பங்கள் பலவற்றுள்ளும் மிகுந்த துன்பமாம் இது கெடுமேல் இன்பங்கள் பலவற்றுள்ளும் சிறந்த பேரின்பம் இடையறாது உளவாகும்.

"இன்பம் இடையறா தீண்டும் அவாவென்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்" —திருக்குறள்

அவா அறுத்தல் 9.

பொருந்தாத இயல்பினதாகிய ஆசையினை நீக்கல் வேண்டும். நீக்கினால் மாறாத இயல்பினதாய பேரின்பத்தினைத் தருவதாகும்

"ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்" —திரு. அவா. 10

அன்பர்களே!

விரதம் காத்து, நிலையாமை யுணர்ந்து, துறவினை மேற்கொண்டு, மெய்யுணர்ந்து அவாவினையறுத்து பேரின்பப் பெருவாழ்வினைப்பெறுதலே நமது கடமை.

**முற்றும்.**

# தெய்வம் இகழேல்.

தவத்திரு பொன். குமாரசாமி அடிகளார்,
(மெய்கண்டார் கழக ஆசிரியர், காஞ்சிபுரம்)

இவ்வாக்கியம் ஒளவை எம் அன்னையார் அமுதமொழி யென்பது நந்தமிழகம் நன்கறியும். இவ்வாக்கியத்தின் எழுத்தை எண்ணினால் ஒற்றெழுத்து நீங்கலாக ஐந்தெழுத்துடையது இதைப் பஞ்சாட்சர மகாமந்திரமாக மக்களுக்கு உபதேசித்ததுபோல் காணப்படுகின்றது. இதன் பொருள் தெய்வத்தை இகழப்படா தென்பதாகும். இகழ்ந்தாலென்ன என்னும் வினவை யெழுப்பி அதற்குவிடை பகர்வார்போல் "தெய்வஞ் சீறிற்கைதவமாளும்" என்றனர். தெய்வத்திற்குக் கோபம் வரும்படி நடந்தால், கைவந்த தவமும் மாண்டொழியும் என்றும், கைதவம்—வஞ்சகம் நம்மை அடிமை கொண்டு ஆளும் என்பதுமாம். "ஆலயம் தொழுவது சாலவும் நன்று" "வையந் தோறுந் தெய்வம் தொழு" என்பதும் மூதாட்டியின் பொன்மொழியாம். பல்லாயிரஆண்டிற்கு முன்னமேயே நம் முன்னோர்கள், திருமால், முருகன், இந்திரன், துர்க்கை, வருணன் முதலிய தெய்வங்களை, முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை, நெய்தல் முதலிய நிலங்களில் வைத்து வழிபட்டு வந்ததாகத் தொல்காப்பிய இலக்கணத்தில்

"மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலென பாலை
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"

எனப்பேசப்படுகின்றது. பின் வந்த செந்நாப்போதரும் திருக்குறளில் முதலதிகாரத்தில் பத்து திருக்குறளில் கடவுள் வாழ்த்துக் கூறி வழி படுகின்றார். சங்க இலக்கியங்களிலும் "பிறவாயாக்கைப் பெரியோன் கோயிலெனவும்" "பஞ்சவர்க்குத் தூது நடந்தானை யேத்தாதநாவென்ன நாவே, நாராயணாவென்னா நாவென்ன நாவே" எனவுங் கடவுள் வழிபாடு பேசப்படுகின்றது. நால்வராதிய அருளாசிரியர்கள், ஆழ்வா ராதியர், பட்டினத்தடிகள், தாயுமானார், அருணகிரிநாதர், இராமலிங்க சுவாமிகள் முதலாகிய மகான்களும் தலங்கள் தோறும் சென்று செந்தமிழ்ப் பாமாலையால் தோத்திரஞ்செய்து கடவுளை வழிபட்டு இருக்கின்றனர். மீண்டும் வழிவழிவந்த நல்லிசைப் புலவர் பெருமக்களும்

முன்னோரடிச்சுவடு பின்பற்றி வழிபட்டுவந்தனர். வழிபாடின்றித் தெய்வநிந்தை செய்த தக்கனும், அவனது தந்தையும் தலையிழந்தன ரென்பதை

"பெருவிதியுஞ் சிறுவிதியும் பெருமானை மதியாமற் பிணங்கியந்தோ,
இருதலையும் இழந்திழிந்தார் என்பதனை மன்பதைகள் இனிதுதேர்ந்தும்,
அருமறைகள் புகழ்ந்தேத்தும் அவன்றனை வணங்காமல் ஆணவத்தால்,
பெருந்துயர்கொண் டருநரகி லழுந்தியிடர் மிகப்பட்டுப் பேதுற்றாரே."

கந்தபுராணம்—

"ஆற்றோடு தும்பை யணிந்தாடு மம்பல வாணர்தமைப்
போற்றா தவர்க்கடை யாளமுண் டேயிந்தப் பூதலத்தில்
சோற்றாவி யற்றுச் சுகமற்றுச் சுற்றத் துணியுமற்று
ஏற்றாலும் பிச்சைக் கிடையாம லேக்கற் றிருப்பர்களே"

பட்டினத்தடிகள்—

கடவுளை வழிபடாதார் இவ்வடையாளமுடையவ ரென்றனர், செல்வந்தர் சிலராகவும், நல்கூர்ந்தார் பலராகவும் இருப்பதற்குக் காரணம் என்னென்று பெரு நாவலரைக் கேட்டால், அவர், சிலர், பலராகிய காரணம், "நோற்றார் சிலர்பலர் நோலா தவர்" என்றனர் "மேலைத் தவத்தளவேயாகும் தாம்பெற்ற செல்வம்" "பண்ணிய பயிரிற் புண்ணியம் தெரியும்" என்பதும் ஆன்றோர் நிறைமொழியாகும். அவ ரவர் செய்த பூசாபலம் என்பதும் பழமொழி.

"அற்புதத் தெய்வம் இதனின்மற் றுண்டோ
அன்பொடு தன்னையஞ் செழுத்தின்
சொற்பதத் துள்வைத் துள்ளமள் ளூறுந்
தொண்டருக் கெண்டிசைக் கனகம்
பற்பலக் குவையும் பைம்பொன்மா ளிகையும்
பவளவா யவர்பணை முலையும்
கற்பகப் பொழிலும் முழுதுமாம் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே."

என்றனர் திருவிசைப்பா ஆசிரியர்.

கடவுள் வழிபாட்டால்தான் சகல போகங்களையும் அனுபவிப் பரென்பது வெள்ளிடை மலையாம். இதுநிற்க; தற்சமயம், மக்களிற் சிலர், சில நூற்றாண்டிற்குமுன்வந்து நம் நாட்டிற் குடியேறின ஆரியர்கள், நம் முன்னோர்களை வஞ்சித்துக் கோவில் குளங்களை சல்லாற் கட்டச்செய்து, பொருள் பறித்துத்தின்று தங்களை உயர்ந்தவர் களாகவும், பூசிப்பவர்களாகவும் ஏமாற்றி சுகவாழ்வு வாழ்கின்றன ரென்று அவர்களைத் திட்டுவதுடன், சாதி, சமயம், சாத்திரம், தோத்திரம், வேதம், ஆகமம், புராணம், இதிகாசம், விபூதி, உருத்தி-

ராக்கம், கோவில், குளம், நான், நட்சத்திரம், யாவும், போலிக்கட்டுக் கதையென்றெள்ளி சிவநிந்தை, சிவனடியார் நிந்தை முதலிய செய்து பழிபாவத்திற்காளாகின்றனர். ஆடு, மாடு, நாய், பன்றி, கழுதை, குதிரை பட்சிகள் முதலியவைகளுக்கு சாந்தி முகூர்த்தத்திற்குப் பஞ்சாங்கம் வேண்டுவதில்லை. நமக்கும் மேற்சொன்னவை வேண்டா வெனில் விலங்குகளுக்கும் மக்களுக்கும் வேற்றுமையில்லையாகும் அன்றோ, மாவும் மாக்களும் ஐயறிவினவே மக்கள் தாமே ஆறறிவு யிரே யென்னும் இலக்கணந்தானென்னாகும். சிந்திக்கவேண்டும்.

தொல்காப்பிய இலக்கணத்தை முற்றும் உணர்ந்தவர்போல் அதிற்றெய்வ வழிபாட்டைப்பற்றி பேசவில்லை யெனத் தங்களை ஆண்டளப்பானுக எண்ணித் தருக்கி அறிவுபோலடர்ந்தெழும் அறியாமையின் வலியால் மூர்க்கராகிப் பித்தாந்தப் பெரும் பிதற்றுப் பிதற்றிப் பாவப் பெருங்குழியில் வீழ்ந்திடுவர். இதுவென்ன பிராந்தி, அன்பர்களே.

"அரிதே மனுடப் பிறப்பின ராய்வரல் அங்கதனின்
அரிதே பலகலை கற்வ ராதல் அதனினுமற்
றரிதே கவிக ளமைப்பவ ராதல் அதனினுமற்
றரிதே பலநூல் செயவல்ல ராதல் அவனியிலே."

என்ற யாப்பருங்கலை இலக்கணப்படி நம்முன்னோர்கள் கல்வியறிவொழுக்கத்திற் றலைசிறந்து இலக்கிய இலக்கண எல்லைகடந்த படிப்பினர். "கல்வியைக் கரையிலார்சேர் காஞ்சிமாநகர்" என்றும் 'செந்தமிழ்க்கு வரம்பெனச் செப்பிய முந்து காஞ்சியின் முற்றுணர் மேலவர்" என்றும், "பொன்னுட்டுப் பொன் செருக்கும் பன்னுக்குப் பணி செருக்கும் போக்கும் இவ்வூர்" எனவும், உயர்ந்த படிப்பினர், விண்ணுலகத்தில் பிரகஸ்பதி, மண்ணுலகத்துள் பெரும்படிப்பினர் ஆதிசேடன் இவ்விருவரும் காஞ்சிபுரத்திற்கு வந்து நம்முன்னோர்களது படிப்பைப் பார்த்துங் கேட்டும் நாம் கற்றதெல்லாம் எற்றே இவர்க்கு நாம் என்று செருக்கொழிந்து தலைசாய்க்க நின்ற பெரும் படிப்பினர் நம் முன்னோர்கள். ஆரியர் புத்தியைக் கேட்டு நடந்தவரல்ல. அவர்கள் புத்தியைக் கேட்டு நடந்தவரானுல்

"ஆதிமறையோதி யதன்பய னென்றும் அறியா
வேதியர்சொல் மெய்யென்று மேவாதே—ஆதியின்மேல்
உற்றதிரு நீரும் சிவாலயமும் உள்ளத்துச்
செற்ற புலையர்பாற் செல்லாதே—நற்றவஞ்சேர்
வேடமுடன் பூசையருள் மெஞ்ஞான மில்லாத
மூடருடன் கூடி முயங்காதே—நீட
அழித்துப் பிறப்ப தறியா அரனைப்
பழித்துத் திரிபவரைப் பாராதே"

என்பதுபோன்ற உபதேச மொழிகளைச் சொல்வார்களா?

"மூவர் காரிய முந்திருத்தும் முதல்வன் தன்னைத் தொழாதஅப்
பாவகாரிகளைப் படைத்தவன் எங்ஙனம் படைத்தான் கொலோ"

எனவும், "துற்றி ஏழுலகுண்ட தூமணி வண்ணன் தன்னைத் தொழாதவர் பெற்ற தாயர் வயிற்றினிற் பெருநோய் செய்வான் பிறந்தார்களே" எனவும், "நேமிசேர் தடங்கையினனை நினைப்பிலாவலி நெஞ்சுடைப் பூமிபாரங்கள் உண்ணுஞ்சோற்றினை வாங்கிப் புலலைத் திணிமினே" என்வும், "பொன்னரங்கம் போற்றுதார் புலையர் தாமே" எனவும்" கடவுளை வழிபடாதவரை எள்ளி இகழ்ந்தும் நமக்கறிவுறுத்தி, கடவுள் வழிபாட்டால் நலமெய்தியவர்களையும் நமக்கெடுத்துக்காட்டியிருக்கின்றனர்.

"செல்வம் ஆண்மையோர் சீர்த்தி வாழ்வருள்
கல்வி கட்டெழில் மகளிர் காழிலாச்
சொல்வ லித்திறம் சூழ்ச்சி யேனவும்
அல்வெ றுஉஙகள னருச்ச னைப்பயன்."

"பதும வாழ்க்கையான் படைக்கும் ஆற்றலும்
மதுவை மாட்டினுன் அளிப்பும் வான்மிசை
யதுல னுதியோர் ஆசை யாட்சியும்
பொதுந டிப்பவன் பூசைப் பேறரோ." காஞ்சிப்புராணம்

காட்டினதுடன்,

"வையமிசைத் தோற்றமுதற் சாங்காறும் மன்றவனைத்
தெய்வமெனப் பேணுத திருவிலிகள் எங்குலத்தில்
எய்தியொரு நாளும் பிறவர்க்க எய்துறினும்
வெய்தெனமற் றுங்கே விளிந்தொழிக எம்மானே."
—காஞ்சிப்புராணம்.

"மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலன் நன்மக்கட் பேறு" —எனவும்,

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற."

எனவும் சொற்றபடி நம்முன்னோர்கள் கடவுளை வேண்டிக் கேட்கும் புத்திரப்பேறும், தோன்றிய முதல் அப்பிள்ளைகள் ஆயுள் முடிவு வரையில் இறைவன் திருவடியில் அன்புடையவர்களாக வேண்டியும், சிவபக்தி இல்லாத அந்த மூதேவிகள் வேண்டாமென்றும், அம்மூடப் பிள்ளைகள் தோன்றின் அவைகள் அன்றே தொலைய வேண்டுமெனவுங் கேட்டுமிருக்கின்றனர்.

தம் மகளிருக்கெல்லாம் நற்பாலர் வேண்டின், மயிலம்மையார் தவம் நாடுக என, நீங்கள் புத்திரப்பேற்றை விரும்பினல் மயிலம்மையாரைப்போற் றவங்கிடந்து அவர்பெற்ற சிவஞான சுவாமிகளைப் போன்ற புதல்வரைப் பெறவும் ஆசீர்வதித்துச் சென்றனர்.

"உய்த்தனர் தேன்மழை யுதவிப் போற்றினுங்,
கைத்திடல் தவிருமோ காஞ்சி ரங்கனி
அத்தக வல்லவோ அறிவி லாதவர்
சித்தம துணர்வகை தெருட்டு கின்றதே" எனவும்,

"பாலாற் கழீஇப் பலநாள் உணக்கினும்
வாலிதாம் பக்கம் இருந்தைக் கிருந்தன்று
கோலாற் கடாய்க் குறினும் புகலொல்லா
நோலா உடம்பிற் கறிவு" எனவும்,

"பன்றிக்கூழ் பத்தரிற் றேமா வடித்தற்றால்
நன்றறியா மாந்தர்க் கறத்தா றுரைத்தல்" எனவும்

"கண்கூடாப் பட்டது கேடெனினும் கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற் றின்றாகும்" எனவும்,

"உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையாய் வைக்கப்படும்."

எனவும் கயவரைப் பெரியோர்கள் எள்ளி இகழ்ந்துள்ளனர்.

"பேதமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல்"

தனக்குக் கேடுபயப்பன வற்றைக் கைக்கொண்டு ஆக்கம் பயப்பன வற்றைக் கைவிடல் போல தமயந்தியை அரவின்வாயில் தப்புவித்த புண்ணியத்தைக் கைவிட்டு அவளைத்தழுவ விரும்பி வெந்து சாம்பராகி பாபத்தைக் கொண்ட வேடன் போலவும், கற்பிற் சிறந்த சானகியைப் போற்றிப்பயன் பெறாது விரும்பி அழிந்து பாபத்தைப்பெற்ற இராவணன் போலவும், திருப்பாக்கடலமுதை விரும்பாது மோகினியை விரும்பி அழிந்த அசுரர் போலவும், அகலிகையைப்போற்றிப் பயன் பெறாது விரும்பிப் பழிபூண்ட இந்திரன் போலவும், கடவுளை வணங்கி நலம்பெறாமல் எள்ளி இகழ்ந்து மீளா நரகிற்காளாகாது வழிபட்டு மக்கள் நலம் பெறவேண்டியே ஔவையெம் அன்னையார் "தெய்வம் இகழேல்" என்னும் இம் மந்திரத்தை உபதேசித்தனர் என்று கருதி வழிபட்டு நலம்பெறுவோமாக.

# அவிரோத வுந்தியார்.

தவத்திரு. சுவாமி முக்தானந்தா அவர்கள்,
( சங்கமூர்த்தி, ஆனந்தாஸ்ரமம், வியாசர்பாடி, சென்னை. )

முன் (ம 2 இ 3 ப 62) தொடர்ச்சி

குடும்பங் கொண்டே மெய்யுணர் வெய்தி,
இடும்பை தீர்ந்தோர் இலரோ வென்றல்.

எங்கே யிருந்தா லென்ன? உறுதி வாய்ந்த மனமுள்ளவர்கள், தமது நிலையினின்றுங் கலங்க மாட்டார்கள். நிலை கலக்கக் கருதி வானம், ஓயாது இடித்தாலும், அவர்கள் உளங் கலங்கார்கள். பிரளய காலம் போன்று, கீழ் மேலாக மண் புரண்டாலும், அவர் மனம் சிறிதும் புரளாது. பேராழி சுழலினும், அவர் மனநிலை சுழலாது முடிவுகாலச் செந்தீ மூண்டு முழுவதும வாய் மடுத்தாலும், அவரது உளநிலை மயங்கி மடங்காது. கொடுங்காற்று அடங்கலுங் கவ்விச் சுழற்றி அள்ளினுலும, அவர் மனம் அது கண்டு நிலையிற் சுழலாது.

ஏனெனில்? ஒடுங்கி நிலைபெற்றுச் சுவையுண்ட உத்தமரது உள்ளமாதலால், அவரதுள்ளம், நடுக்கங் கொள்வதில்லை. அத்தகைய கலங்கா நிலையுற்றோர்க்கு, யாதொரு இடும்பையும் இல்லை. அவர்கட்கு இரவில் போன்று, உலகம் ஒடுங்கிய நிலையும் இல்லை; பகலிற்போன்று உலகம் விரிந்த நிலையும், அவர்களது மனநிலையில் இல்லை. ஆட்சியாளரே யாயினும் அத்தகைய நிலையில், அவர்களது ஆட்சிமுறை எங்ஙனம் தோன்றும்? அவரது அமைச்சர் முதலானோர்க்கு, அறிவிக்கும் தன்மை தான் எங்ஙன முண்டாகக்கூடும்? அடிமைகளைக் குறித்து ஆணையிடுவது தான் எங்ஙனம் பொருந்தும்? ஆசி மொழிகளைக் கரத்திற்கொள்வ தெப்படி? அவர்கள் முன்னிலையிற் பகை கொண்டெழும் படைகளுந் தோன்ற மாட்டாவன்றோ? உறவுகொண்டு நெருங்கும் உற்றாரும் காணப்பட மாட்டார்கள், இப்படிப்பட்ட நிலையில், மாபெருஞ் செல்வமும், அவரது மனதை மயக்க வல்லதாகுமா? ஆகாது, மலய மலை யொத்த மனையைக் கண்டேனும், அவர் மனம் மகிழ்ந்து அதிற்பற்றுக் கொள்ளுமா? அரம்மை மாதரை யொத்து ஆடிப் பாடி அருகி யணைக்கும் அழகியருக்கும் அங்கு வேலையென்ன உளது? மழலை மொழி புகுத்து வந்து வீழும் மக்கள் தாம், அவர் மனதில் தோன்றுவார்களா? அருந்தல்கள் தாம், அவர்க்குச் சுவை யூட்டி மயக்கும் ஆற்றலுள்ளவை யாகுமா? ஆக மாட்டா.

இவ்வாறு; குடும்பம் என்று கூறப்படுவதற்கு இலக்கணமா யுள்ளவை யாவும், தம் வலு விழந்து, பொலி வழிந்து, செயலற்றுப் போகும் வண்ணம், தனது ஆன்ம நிலையில் மனதைச் செலுத்த வேண்டும் செலுத்தப்பட்ட இடத்தில் நிறுத்தப்பழகுதல் வேண்டும். அடிக்கடி பழகிய பழக்கத்தால், அலையாது நிற்றல் கைவரப்பெறும். பெற்ற நிலையில் பிறழாமல் நிலைப்பவர்க்குக், குடும்பம் பற்றி யிருந்தே மெய்யுணர்வை அடைதலுங் கூடும். ஆயினும்; இவ்வழி அருமையினும் அருமை.

கல்லைப் புணையாகப் பற்றிக் கொண்டு, கடலைக் கடந்துள்ளார் கள், இது, உலக நிகழ்ச்சிகளுள், மிக மிக அருமையினும் அருமை யான நிகழ்ச்சியல்லவா? மூன்று காலங்களிலும், முடியாத நிகழ்ச்சியே மூன்று உலகங்களிலும், இப்படிப்பட்ட செயலொன்று நிகழ்ந்துள்ள தென்று, கண்டோரேயில்லை, கேட்டோருமில்லை இனிமேல் கருதவும் இடமில்லை,

நமது 'தாயும் ஆனவர்' என்ற தந்நிகரில்லாத் துற விறைவர்; தாமருளி யுள்ள "கந்துக மதகரியை" என்ற தலைப்புள்ள பாடலில்; அரிய செயல்களெனக் கருதப்படுபவை யாவும், மக்களாற் செய்யத் தக்கவை தாம்; என்றறிவித்த தோடு, நீர்மேல் நடக்கவுஞ் செய்யலாம் என்றுங் கூறியுள்ளார்கள். ஆயினும்; கல்லைத்தோணியாகப் பற்றிக் கொண்டு, கடலைக் கடந்து விடலாம் என்று கூறவில்லை. இந்த ஆற்றல் தாயுமானுர்க்கு உள்ளபடி இல்லையோ? அல்லது அத்தகைய துணிவில்லையோ? அறியோம்,

இக்காலத்தில் பௌதிக விஞ்ஞானம், மக்கள் மனதை மயக்கு வதாயுள்ளது. இது, நலம் புரிவது போன்று, நடைமுறையிலுள்ளது. அதிலேயே மாளும்படியும், அனைத்தும் அழியும் படியும், செய்வதாக மிக முன்னேறிப் பரவி, அச்சுறுத்தி வருகின்றது. கால் கோள் விழாவும் காணப்படுகின்றது. இது, இந்த வுலகையும் அழித்தொழிக் கத் திட்டமிட்டுக் கொண்டிருக்கின்றது. ஆயினும், இது பருப் பொருள் களாகிய புறப் பொருள்களை, கூட்டியுங் குறைத்துஞ் சேர்த்தலால் உண்டாகும ஆற்றல்; அல்லது 'விரைவு' என்னலாம். இந்த விஞ்ஞானத்தில் கூட, கல்லைத் துணை கொண்டு கடல் கடத்தல் காணப்படவுமில்லை. காணப் போவதுமில்லை; வேண்மானல் மிதக்கக் கூடிய கருவி (இயந்திரம்) ஒன்றை ஒரு கல்லின் கீழ்ப்பொருத்திக் கொண்டு மிதக்கலாம். அப்படிப்பட்ட கபட வித்தை யொன்றுங் காட்டினரில்லை, நமது தமிழ் நாட்டுத் தோன்றல்; 'உலகுயிரனைத் தினுக்கும் அப்பராயுள்ளவர்'; மற்றேறு? நிலைகலங்காத உறுதி யொன்றையே, நமது நாவரசர், கல்லை மிதப்பிக்க, நற்றுணையாகக் கொண்டார்; "நமச்சிவாய" ; மொன்றிலேயே நாட்டினர் மனதை, கடலைக்கடந்தார்.

இது போன்றே, நிலைதடுமாறாமல் உறுதி பூண்டு உள்ளவர்கள், எங்கே யிருப்பினும், மெய்யுணர்வைப் பெறலாம். இல்லிருந்தே, வெறுப்பை வெளிக்காட்டாமல், மனதால் மாண் பொருளில் ஊன்றி நிற்பவர்க்கே, உளதாகும் மெய்யுணர்வு; என்பதை அவிரோத உந்தியார் அறிவிப்பது காண்பாம்.

(கஅ) அ—உந்தியார்:—

கற்றழீஇ முந்நீர் கடந்தோரு(ம்) உண்மையால்
இற்றழீஇ மெய்யுணர்(வு) உந்தீ பற
எய்ந்தோரு(ம்) இல்லெனு(ர்) உந்தீ பற.

பொழிப்பு:—

முந்நீர். கல் தழுவி கடந்தோரும் உண்மையால், இல் தழுவி, மெய்யுணர்வு எய்ந்தோரும் இல்,எனர் உந்தீ பற, உந்தீ பற,

பொருள்:—

'முந்நீர'—(ஆற்று நீர், ஊற்று நீர், வேற்று நீர் இவை ஒன்று சேர்ந்து முந்நீரெனத் தேங்கியுள்ளதான) கடலை, 'கல் தழுவி'—(கரை யேறுங் கருத்துடையானுக்கு கட்டுமரம் துணையாவது போன்று, சமண முனிவர்களின் கருத்துக்கிணங்கச், சமண அரசனால் கட்டிப் போடும்படி செய்யப்பட்ட) கல்லையே புணையாகப் பற்றிக்கொண்டு, 'கடந்தோரும்'—(கடலைக்) கடந்து கரை சேர்ந்த (நமது) மருள் நீக்கியாராகிய மாமுனி வரும்; 'உண்மையால்' — (அடையாளங்களும், ஆலயங்களும், அருளிப்பாக்களும், வரலாறுகளும் அறிவிக்க) இருக்கின்றமையால், 'இல் தழுவி' — இல்வாழ்க்கையைப் பற்றிக்கொண்டிருந்தே, 'மெய்யுணர்வு' — (எல்லை யற விரிந்து, இருப்பு இன்பு ஒளியாகிய தன்னை) மெய்யாகத் தானெனவே அறியும் அறிவை; 'எய்ந்தோரும்' — அடைந்துள்ள பெரியோர்களும்; 'இல் எனர்' — இருந்தார்களில்லை என்று சொல்லமாட்டார்கள்; 'என்று' —(என்று கூறிக்கொண்டே; 'உந்திபற'—உந்திப்பறவுங்கள் சிறுமிகாள் உந்திப் பறவுங்கள், எனவாம்.

இல் வாழ்க்கையோடு கலந்திருப்பினும்; அதிலுள்ள அடைவு அழிவுகட்கு மகிழாமலும், வாடாமலும், இன்ப துன்பங்களை ஏற்காமலும் இரங்காமலும், தன்னுணர் வொன்றையே குறியாக வைத்து, மன வெழுச்சியை உள்நோக்கிச் செலுத்திக் கொண்டே யிருந்து, நிலை பெற வைத்தோனுக்கு மெய்யுணர்வு கைவரப் பெறும் என்கின்றது.

(தொடரும்)

# ௲. யோகசிகோப நிஷத்—தமிழ் பொழிப்புரை.

தவத்திரு. திரிமூர்த்தி சுவாமிகள்,
(சாது சுவாமிகள் ஆஸ்ரமம், பழநி.)

முன் (ம 2 இ 3 ப 74) தொடர்ச்சி

**(அ....கை) ஆறுசக்கரங்களில் பிரம்மா முதலிய தேவதைகளைத் தியானிப்பதால் சுழுமுனை வழியாக அமுதமணடலத்தை அடைகின்றான் எனக்கூறல.**

மூலாதார முதல் பிரம்மரந்திரம் வரை சுவாதிட்டானம், மணிபூரகம், அனாஹதம், விசுத்தி, ஆக்ஞை, ஸகஸ்ராரபதுமம் என ஆறு சக்கரங்கள் உள்ளன. அவற்றில் முறையே பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மகேசன், சதாசிவம், சுத்தசிவம், என ஆறு தேவதைகளையும் முறையே தியானஞ் செய்தல் வேண்டும். இங்ஙனம் தியானிப்பதாலும், இடை பிங்கலைகளில் வெளியே செல்லுகின்ற காற்றைத் தடுத்துப் பிராணாயாமத்தால் சுழுமுனை வழியிற் செலுத்தி மூன்று முடிச்சுக்களையறுத்து அமுதமண்டலத்தை அடைவதாலும், மேலான முக்தி நிலையானது யோகிகளால் அடையப்படுகின்றது, என அறியவும். (34)

**(அ....கை) பிராணனைப் பிரம்மாந்திரத்தினுள் சுழுமுனை வழியாக ஒடுக்கியவன் முக்தனாகின்றான எனக்கூறல்:—**

யாதொரு உபாசகன் பிராணனைச் சுழுமுனை நாடியின் கீழும் மேலும் இடையறாது செலுத்துகின்றானோ, அவனுடைய பிராணன் சுழுமுனை நாடியில் அசையாது நிலைபெறுகின்றது. பிராணன் நிலைபெற்றவுடன் இடை பிங்கலைகளின் அதிதேவதைகளான சந்திர சூரியர்களும் ஒடுங்குகின்றார்கள். பிராணன் ஒடுங்கவே மனதும் வேகமற்றதாய்ச் சங்கற்ப விகற்பங்களை விடுத்துச் செயலற்றதாய்ச் சுழுமுனை நாடியில் ஒடுங்குகின்றது. அப்பொழுதே அவ்வுபாசகன் யோகத்தின் உண்மையைக் கண்டவனாய் யாவற்றினும் ஊடுருவி நிற்கும் இன்பரசத்தை அனுபவிக்கின்றான் என்று அறியவும். யாதொரு உபாசகனாகிய யோகி முக்தி வழியாகிய சுழுமுனை நாடியில் பிராணனோடு மனதையும் ஒடுக்கிக் கணப்பொழுதாயினும், அல்லது அரைக்கணப் பொழுதாயினும் நிலைபெறுகின்றானோ, அவ்வுபாசகன் சுழுமுனைநாடியின் முடிவிலுள்ள அமுதமண்டலத்தில் நீரில் உப்புக்கட்டி கரைவதுபோல கரைந்து இன்பவடிவாகின்றான். அவன் பாலும் நீரும்போல் அமுதமண்டலத்தில் கலந்து ஏகவுருவாகின்றான். அவ்வுபாசகனுக்கே மும்மலக் கட்டுகள், அறுபடுகின்றன. ஐயப்பாடுகளும் ஒழிகின்றன. அவனே பெருவெளியிற் கலந்து பேரின்ப வடிவனாகின்றான் என்று அறிக. (40)

(அ....கை) முக்தி வழியாகிய சுழுமுனு நாடியை அடைந்தவனது பெருமையைக் கூறல்:—

கடலிலும் கங்கையிலும் மூழ்கி மணிகர்ணிகையை வணங்குவதால் உளதாம் பயன், நடுநாடியாகிய சுழுமுனையினது விசாரத்தின் புண்ணியத்தில் பதினறில் ஒருகலைக்கும் ஒப்புமையாகாதென்று அறிக. ஸ்ரீசைலத்தைக்காண்பதாலும், வாராணசியில், அதாவது காசியில் மரிப்பதாலும், கேதாரத்தில் தீர்த்தம் பருகுவதாலும், முக்தி உளதாமெனக் கூறப்பட்டுளது. அக்கூற்று பொய்க்கூற்றன்று. எங்ஙனமெனின் அதனுண்மைப் பொருள் இதுவாம். ஸ்ரீசைலமென்பது:- உடலில் சுழுமுனு நாடியின் முடிவிடமாயுள்ள தலையுச்சி என்பதையும், வாராணசி என்பது:- இடை பிங்கலை கூடுமிடமான புருவ நடுவிலுள்ள சுழுமுனுநாடி என்பதையும், கேதாரமென்பது:- சுழுமுனு நாடியின் முடிவிடமாயுள்ள அமுதமண்டல மென்பதையும், நன்ருய் அறிந்து கொள்க. ஆகையால் உடலில் சுழுமுனு நாடியின் முடிவிடமாயுள்ள தலையுச்சி, புருவநடு, அமுதமண்டலம், இவைகளைக் கண்டவனை முக்தனுகின்ருன் என்பது நிச்சயம். ஆயிரம் அஸ்வமேத யாகஞ் செய்யினும், நூறுவாஜபேயம் செய்யினும், சுழுமுனுநாடிதியான பலத்தின் பதினறில் ஒரு கூற்றிற்கு ஒப்பாகாது என்று அறியவும். யாதொரு உபாசகன் சுழுமுனு நாடியின் சேர்க்கையைப் பெறுகின்ருனே, அவன் எல்லாப் பாவங்களினின்றும் நீங்கி ஒப்புயர்வற்ற முக்தியைப் பெருகின்ருன். சுழுமுனையே சிறந்த தீர்த்தம், சுழுமுனையே சிறந்த ஜெபம், சுழுமுனையே சிறந்த தியானம், சுழுமுனையே சிறந்த முக்தி என்று அறியவும். மற்றும் அளவிறந்த யாகங்கள், தானங்கள், விரதங்கள், நியமங்கள் யாவும் சுழுமுனுத்தியான யோக பலத்தில் பதினறில் ஒரு கூற்றையேனும் ஒவ்வாது. (46)

(அ...கை) சக்திக்கும், ஜீவனுக்குமுள்ள இடவேற்றுமையைக் கூறல்:—

பிரம்மரந்திரமாகிய பெருவெளியில் சுத்தசக்தி இருக்கின்ருள், பிரம்மரந்திரத்திற்கும் நெற்றிக்கும் நடுவில் சிறந்த சித்சக்தி இருக்கின்ருள். நெற்றியின் மேலிடத்திலும இதயவெளியிலும் மாயாசக்தி இருக்ருள். நெற்றியின் நடுவில் நாதவடிவ சிறந்த சக்தி இருக்கின்ருள். நெற்றியின் அடிப்பாகத்தில் பிந்து சக்தி இருக்கின்ருள். அந்த பிந்துவின் நடுவில் சூக்குமவடிவாய் ஜீவான்மா உளது. அந்த ஜீவான்மாவே இதய நடுவில் தூலவடிவாய் இருக்கின்றது என்று அறிக. (50)

(தொடரும்)

# அறிவிப்பு.

அன்புடையீர் !

சென்னை அகத்திய குருகுலம் சாது நாராயண தேசிகர் நிலையத்தின் (மடத்தின்) அதிபதியாக இருந்து காலஞ்சென்ற ஞானாநந்த மணவாள சுவாமிகளின் முதல் மாணவியும், ஷெ சுவாமிகளின் உடனிருந்து பரமகுருவாகிய சாது நாராயண தேசிகர் அவர்களுக்கு நாற்பதாண்டுகள் குருபூஜை வழிபாடும், அன்னதானமும் செய்து வந்தவர்களும், சென்னையிலும், குளப்பாக்கத்திலும் உள்ள ஷெ நாராயண தேசிகர் நிலையங்களின் நிருவாகப் பொருப்பினை வகித்து நிலயங்களின் முன்னேற்றத்திற்காக 25-ஆண்டுகள் அரும்பெரும் தொண்டாற்றி அபிவிருத்தி செய்து அடியார்களுக்கு அன்புப்பணி செய்து வந்தவர்களுமான அன்புத்தாய் இலட்சுமிகாந்த அம்மையாரவர்கள் தமது அறுபத்தோராவது வயதில் மன்மத ஆண்டு பங்குனித்திங்கள் பதினோராம் நாள் (24—3—56) சனிக்கிழமை இரவு $12\frac{3}{4}$-மணிக்கு இறைவன் திருவடியை அடைந்தார்கள். மறுநாள் சமாதி அடக்கமும் நடந்தது. அதுகுறித்து சென்ற மன்மத ஆண்டு பங்குனித்திங்கள் 26-ம்நாள் (8-4-56) ஞாயிற்றுக்கிழமை சென்னை சைதாப்பேட்டை புஜங்க ராவ் தெரு 5-ெந, சூரியமூர்த்தி நாயுடு இல்லத்தில் நீத்தார் கடன் நிகழ்ச்சிகள் நடைபெற்றன. பகல் 12-மணிக்கு மாகேசுர பூஜையும், யாவருக்கும் அறுசுவை உணவளித்தலும் நடைபெற்றன. பிற்பகல் 3-மணிமுதல் 7-மணி வரை சங்கேந்தி உயர்தவத்திரு. குக. சதாசிவ அடிகளார் தலைமையில் ஷெ அம்மையார் மீது பாடிய இரங்கற்பாக்களின் அரங்கேற்றமும், முறையே சுவாமி அருணகிரிநாதர், திரு. வ. மாசிலாமணி முதலியார், திருவண்ணாமலை ஸ்ரீ ஜய-லட்சுமி அச்சகம் திரு. ந. வேணுகோபால் நாயுடு அவர்கள், பண்டித வித்துவான் திரு. பொன். இராமநாதன் செட்டியார் (தியாகராயர் கல்லூரி, சென்னை.) வித்துவான் திரு. ச. கந்தசாமி முதலியார் (தியாஜிகல் ஸ்கூல்), திரு. அரங்கநாத முதலியார் (பாம்பே), திரு. சாம்தருமலிங்க முதலியார் (ஐயம்பேட்டை) முதலானவர்கள் ஷெ அம்மையாரின் அரும்பெருந் தொண்டுகளையும், உயர்ந்த பண்புகளையும், பக்தி விசேஷத்தையும் வியந்து பாராட்டிப் பேசினார்கள். தலைவர்கள் முன்னுரையிலும், முடிவுரையிலும் அம்மையாரின் பண்புகளையும், தொண்டுகளையும் மிக மிக வியந்து பாராட்டிப்பேசியதோடு, பல அரிய கருத்துக்களை எடுத்து விளக்கிப்பேசி முடித்தார்கள். பின்பு சுவாமி அருணகிரிநாதரவர்களின் நன்றிகூறல் கடவுள் வாழ்த்துடன் சபை இனிது முடிவுபெற்றது.

## அன்புத்தாய் இலட்சுமிகாந்த அம்மையார் அவர்களின்
### அன்புப் பணியை நினைந்து
### சுவாமி அருணகிரிநாதர் அவர்கள் பாடிய
# இரங்கற்பாக்கள்.

பூவுலக நலமனைத்தும் பொங்குதமிழ் நாடதனின் பொருள்க ளெல்லாம்
மேவுசென்னை ராயபுரம் மிளிர்பதும வேளாளர் வியந்து போற்றுக்
தாவறுசீர் தாயம்மை தாசில்நா ரணசாமி தவத்தாற் பெற்ற
பாவைஇலட் சுமிகாந்தம் பண்ணுதவத் தொண்டினைநாம் பகரப் போமோ!

பள்ளியிலே தமிழ்படித்தாய் பாகவதம் ராமகதை படித்தாய் நெஞ்சை
அள்ளுகின்ற பக்தவிஜ யம்படித்தாய் திருப்பாவை அனைத்துங் கற்ருய்
உள்ளபடி இளமையிலே ஆண்டவன்பால் பக்திமிக வுதித்த தாலே
தெள்ளியநற் பண்பனைத்துந் தேடிவந்து நினையடையச் சிறந்தா யம்மா!

பதின்மூன்ரும் வயதினிலே ரங்கைய நாயுடுவைப் பதியாய்ப் பெற்ருய்
பதியவரோ டிரண்டாண்டு இணைபிரியா மான்போலப் பரிந்து வாழ்ந்தாய்
விதிவயத்தாற் பதியுன்னை விட்டகல விண்டுவையே பதியா யெண்ணித்
துதிசெய்து தொண்டாற்றித் துளபமணி மார்பனைநீ தொழுதிட் டாயே.

உடன்பிறந்த கிருஷ்ணம்மா ளுடனிருந்தாய் அவர்குடும்பம் ஓங்கச் செய்தாய்
கடமையினுல் தமக்கைபெற்ற மக்களைச்சேய் போல்வளர்த்தாய்கைம்மாறின்றி
மடமைதவிர் ஞானகுரு மணவாளர் மாணவியாய் வாய்ந்தன் ஞரின்
உடலுயிர்போற் கட்கிமைபோல் நீசெய்த பணிவிடைகள் உரைக்கற்பாற்ரே!

மலைமுனிவர் மரபுதித்த பரமகுரு நாரணற்கு வருடந் தோறும்
தலைமையதாங் குருபூசை சென்னையிலுங் குளப்பாக்கந் தனிலுஞ் செய்தாய்
மலைபோலக் குவித்தன்னம் வந்தவர்க்கெல் லாமளித்தாய் மலைவில் லாமல்
நிலையான பரமபதம் குருபூசை செய்ததனுல் நீபேற் ருயே.

மடமதனில் அதிபதியாய் மணவாள ரிருந்தாலும் மடநிர் வாகம்
இடம்பொருள்கள் எவலெலாம் எற்றுநடத் தும்பொருப்பை எந்திக் கொண்டு
கடமையென நீசகல காரியமுஞ் செய்துவந்தாய் கைவிட் டாயே
உடமைகளைப் பாதுகாத் துரிமையுடன் நினைப்போல்யார் ஓம்ம வல்லார்!

சிலமுடன் குளித்துநிதஞ் செஞ்சுடரை வணங்கிடுவாய் திருநீறிட்டு
மூலமகா மந்திரத்தை முப்போதுஞ் செபித்திடுவாய் முதிர்ந்த அன்பாற்
காலையிலும் மாலையிலுங் கடவுளைநீ வணங்கியன்ரே கடமை செய்தாய்
மாலவனின் ஓலைவந்தோ? மௌனமாய்ச் சென்றனைவை குந்தம் அந்தோ!

உறுதியுடன் நீசெய்த உபாசனையாற் பணிவிடையால் உபகா ரத்தால்
இறுதியினில் துன்புறுத்துங் காலனினை அணுகாமல் இடைந்திட் டானே
மறுபிறவி யில்லாமல் வைகுந்த வாழ்வதனை மால்தந் தானே
அறுதியிட்டுக் கூறுகிறேன் அம்மாநின் போற்பிறத்தல் அருமை யன்ரே!

குருவாக நீயடைந்த மணவாள சுவாமியுநின் கொழுந ஞரும்
ஒருதாயின் மக்களாய் உடன்பிறந்தா ராதலினுல் உரிமை யாலே
பரிநாம சூலையினுல் அவர்வருந்தும் போதுநீ பண்ணுஞ் சேவை
ஒருநாவால் யானெடுத்திங் குரைப்பதற்கு முடியுமோ? உலகுக் கம்மா!

பாலகனின் பசியினைத்துப் பரிந்தெடுத்துப் பாலூட்டும் பண்பார் தாய்போல்
பாலமுது கறிவகைகள் பக்குவமாய்ச் சமைத்தெடுத்துப் பதங்கெ டாமல்
காலமறிந் தெமையழைத்துக் கால்கழுவ நீர்கொடுத்துக் கருணை யோடு
சாலவுண விருவருக்கும் அருகிருந்தே ஊட்டுவிக்குந் தாய்சென் றாயே.

நந்தனவை காசியினில் நமதுகுரு மணவாளர் நம்மை விட்டு
அந்தமிலா வீடடைந்தார் அவர்பிரிவை யான்சகிக்கா தரற்றுங் கால்நீ
இந்தவுடல் உள்ளவரை என்குருவைப் போலுனக்கிங் கெல்லாத் தொண்டும்
சந்ததமுஞ் செய்திடுவேன் என்றுறுதி மொழிதந்த தாய்சென் றாயே.

முன்னைவினைப் பயனோநீ என்னைமகன் போற்கருதி மூவைந் தாண்டு
தன்னலமே கருதாமல் என்னலமே கருதியெனைத் தத்தஞ் செய்தாய்
இன்னலுறும் போதெல்லாங் கண்ணீறு கழித்திடுவாய் எதிரே நின்று
என்னேநின் கருணையம்மா? இனியெனக்கிங் குன்போல்யார் இதஞ்செய்

அன்னமிடும் போதுபன்னாள் தின்னமுடி யாததனை அகற்றி னாலும் [வாரே!
என்னவித மாயேனும் எனக்கதனை ஊட்டிடும்நின் இன்சொல் அம்மா!
கன்னலினும் இனியவுன்றன் கனிமொழியும் பணிவிடையும் கசியும் அன்பும்
என்னிதயம் மறந்திடுமோ? மறந்தால்யான் உய்வேனோ? இகத்தி லம்மா!

அரிசியில்லை விறகில்லை அதைப்பற்றிக் கவலையுங்கட் குண்டோ வென்றே
குருபூசை வருமுன்னே அரிசிகுற்றி விறகுவெட்டிக் குவித்து வைப்பாய்
ஒருபொருளுங் குறைவின்றி ஒவ்வொன்றாய்ச் சேர்த்துவைப்பாய் ஒங்கு கற்ப
தருவேபோல் நினைத்தவெல்லாந் தந்துபணி யாற்றிவந்த தாய்சென் றாயே!

அருணையிலே நடத்துதமிழ்த் துறவிகள்மா நாட்டினுக்காம் அரிசி மற்றும்
அருங்கனியும் அல்வாவும் அதிரசநெய் இட்டலியும் ஆண்டு தோறும்
அருமையாய்ச் செய்தெடுத்தங் கென்னுடன்வந் தடியரெல்லாம் அருந்தச்செய்
திருவருணை அண்ணலே திருமாலாய்த் தன்னடியிற் சேர்த்திட்டாரோ?[வாய்

என்னுடைய தவப்பயனோ? நின்னுடைய புண்ணியமோ? இரண்டு பேர்க்கும்
பின்னமிலாப் பேரன்பு பெருக்கெடுத்து வந்தநமைப் பிணைத்த தம்மா!
என்னையுநின் குருமகவாய் எண்ணிநீ செய்ததொண்டும் இந்நாள் மட்டும்
நின்னையுமென் தாயாக நினைத்துனக்குச்செய்ததெல்லாம்நினைவாய்ப்போச்சே

அன்னையே! நின்றனக்கிவ் வறுபதாம் ஆண்டுநிறை வான தென்று
முன்னமே நீயறிந்தோ? முகுந்தனுக்குத் தூதனுப்பி முடிவு செய்து
என்னிடத்தும் பேசாமல் எறெடுத்தும் பாராமல் இமைகொட் டாமல்
அன்னமுநீ ரருந்தாமல் ஐந்துநாள் தவங்கிடந்தாய் அடைந்திட்டாயே.

## வேண்டுகோள்.

ஒலமிட்ட யானைமுன் ஒடிவந்தே இடர்தீர்த்தாய் உடனே ஆதி
மூலமே உலகமெலாம் படைத்தளித்துத் துடைத்தருளும் முதலே யுன்னைக்
காலமெலாந் தொழுதுவந்த இலட்சுமி காந்தநினைக் காண வந்தாள்
நீலமணி ஒளிவடிவில் அவளையணைத் தின்பருள்வாய் நெடிய மாலே.

## நாட்குறிப்பு.

மன்மத ஆண்டு பங்குனித் திங்கள் வளர்பிறை நாள்பதி னைந்தில்
நன்மதி பூரம் சதுர்த்தசி சனியில் நள்ளிரா உத்தரா யணத்தில்
சென்னையிற் சாது நாரண ஞான தேசிகர் மடத்துமா ணவியாம்
பொன்னுலகேத்தும் இலட்சுமி காந்தப் புனிதைதான் முத்தியை அடைந்தாள்

## செய்திகள்.

வேலூர் சைதாப்பேட்டை உயர்தவ தோப்பா சுவாமிகளின் 108-வது ஆண்டு குருவழிபாட்டு விழா நந்தன-பங்குனி 29-ம் நாள் புதன்கிழமை நடைபெற்றது. காலை மணி 9-முதல் 12-வரை அபிஷேக அலங்கார ஆராதனைகளும், பகலமணி 12-க்குமேல் மாகேஸ்வர பூஜையும் பிற்பகல் மணி 4-க்கு திருமயிலை சிவத்திரு. K, S. காஞ்சனமாலை அம்மையார், சைவப்பிரசங்க ஞானபானு திருவுயர் கா. ராஜாராம் பிள்ளை அவர்கள் ஆகிய இவர்களால் முறையே "திருஞானசம்பந்தர்" 'மாணிக்கவாசகரும்-குருபக்தியும்' என்றதலைப்பில்சொற்பொழிவுகளும் நிகழ்ந்தன. இவ்விழாவினைச் சிறப்புற நடத்திய நிலையத் தலைவரவர்களின் குருபக்தியை மிகவும் பாராட்டுகிறோம்.

இரங்கநாதம் பேட்டை திருஞானசம்பந்தர் அருள்நெறி மன்றம் 2-வது ஆண்டு 8-வது சொற்பொழிவு நிகழும் துன்முகி ஆண்டு சித்திரைத் திங்கள் 4-ம் நாள் (16—4—56) திங்கள் பிற்பகல் மணி 7-முதல் இரங்கநாதம்பேட்டை ஸ்ரீ ஹரிஹர பிரமானந்த பஜனை மடத்தில் நாமக்கல் தமிழறிஞர் திரு. க. முத்துசாமிப் பிள்ளை அவர்களால் "சுக்ரீவன் நட்பு" என்பதுபற்றி சொற்பொழிவு ஆற்றுவார்கள்.

## பெரியபுராணச் சொற்பொழிவு நிறைவிழா.

செங்கம் தாலுக்கா காஞ்சி கறைக்கண்டேசுவரர் ஆலயத்தில் மன்மத-யாண்டு, தைத்திங்கள் 12-ம்நாள் முதல் நாடோறும் பிற்பகலில் காஞ்சிபுரம் வித்துவான் தவத்திரு. சி. பொன்னுசாமி அடிகள் அவர்களால் நடைபெற்றுவந்த பெரியபுராணச்சொற்பொழிவு நிறைவிழாவின் சிறப்புக் கூட்டம் பங்குனி, 25, 26 (7, 8—4—56) சனி, ஞாயிறு ஆகிய இரண்டு நாட்களிலும், பிற்பகல் 2-மணிமுதல் தருமையாதீன வித்வான். சித்தாந்தரத்நாகரம், முதுபெரும் புலவர் திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள் தலைமையில் "பெரிய புராணம்" "சமயம்" "அரசர்களும்-அடியார்களும்" "அடியார் பெருமை" "பெரியார் அருள்மொழி" என்ற தலைப்பில் முறையே, காஞ்சிபுரம் திரு. சி. பொன்னுசாமி அடிகள், தருமையாதீனம் வித்வான். திரு. ம. சிவசம்பு அவர்கள், தருமையாதீனம் வித்வான். திரு. வி. சா. குருசாமி அவர்கள் தருமையாதீனம் வித்வான். திரு. சி. சிங்காரவேலனார் அவர்கள், காஞ்சி, வித்வான். திரு. மா. நீலகண்ட முதலியார் அவர்கள் ஆகிய இவர்கள் எடுத்துக்கொண்ட பொருளை இனிது விளக்கி மிக அழகாகச் சொற்பொழிவாற்றினர்கள்,

8—4—56-காலை மணி 7-முதல் 10-வரை யானையின்மேல் திருமுறை ஊர்வலமும், 11-மணிக்கு மாகேசுவர பூசையும் மாலை மணி 8-30-க்கு தேவார இன்னிசையுடன், பஞ்சமூர்த்திகள் திருவீதி உலாவும் நிகழ்ந்தன. இவ்வரும்பெரும் தொண்டினை ஏற்று நாடாத்திய காஞ்சி ஊராட்சித் தலைவர் திரு. தொ. கோ. சுப்பிரமணிய முதலியார் அவர்களின் கடவுள் பற்று மிகவும் பாராட்டத்தக்கது.

ஓம்.

# உயர் தவ கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகள்

## 38-வது ஆண்டு விழா.

சென்னை வியாசர்பாடி ஆனந்தாஸ்ரம சாது மகா சங்கம் சங்கமூர்த்தி உயர்தவ. சுவாமி முக்தானந்தா அவர்களால் 4—4—56 புதன்கிழமை வெகு சிறப்பாக நடத்தப்பெற்றது.

காலை 7-மணி முதல் 11-மணி வரை அபிஷேக அலங்கார நைவேத்திய சோடச உபசாரங்களும், 12-மணிக்கு மாகேசுவர பூசையும் (அன்பர்கட்கும், அடியார்கட்கும், ஏழைகட்கும் அன்னமளித்தலும்) பிற்பகல் மணி 2-முதல் 4-வரை மயிலை சைவப்பிரசங்க இன்னிசைச் செம்மனச்செல்வி, **திரு. K. S. காஞ்சனமாலை அம்மையாரவர்களால்** இன்னிசையுடன் சைவச்சொற்பொழிவும், 4-மணிமுதல் 8-மணிவரை **சங்கேந்தி. தவத்திரு குக. சதாசிவ அடிகளார் அவர்கள்** தலைமையின்கண் "திருவருட்பாவில் ஒரு திவலை" "சம்பர் காட்டும் கடவுள் நிலை" "துறந்தார் பெருமை" "எதுநான்" என்னும் பொருள் பற்றி முறையே, சென்னை, சமரச சுத்த சன்மார்க்க சங்கம், **திரு. மா. இராசமாணிக்கம் பிள்ளையவர்கள்**. சென்னை பச்சையப்பன் கல்லூரி, துணைத் தமிழ்ப் பேராசிரியர், வித்வான் **திரு ரா. நடேச நாயகரவர்கள்** சென்னை, சௌபாக்கியம் துணை-எழுத்தாளர், **திரு. B. C. லிங்கம் அவர்கள்,** சென்னை சாது நாராயண தேசிகர் நிலையம், த. நா. து: சங்கத்தலைவர், **திரு. சுவாமி அருணகிரிநாதரவர்கள்** ஆகிய இவர்களால் சமயச்சொற்பொழிவுகளும் நிகழ்ந்தன. குறிப்பாக சுவாமி அருணகிரி நாதரவர்கள் நம் தமிழகத்திற்கும், தமிழ் மொழிக்கும் தமிழ்நாட்டின் பண்பாட்டிற்கும் வந்து சூழ்ந்துள்ள இன்னல்களையும், அவை நீங்கும் வழியையும் எடுத்துக்காட்டி அரியதோர் பேருரை நிகழ்த்தினார்கள். பின் **திரு. D. பத்மநாபம் பிள்ளையவர்கள்** நன்றிகூற கூட்டம் இனிதே முடிவுற்றது.

நம் "துறவி" சித்திரை இதழ் வெளிவர பேருதவிபுரிந்த தஞ்சை மாவட்டம், திருவாரூர் குரு. தட்சணாமூர்த்தி சுவாமிகள் மடத்தின் தலைவர் தவப்பெருந்திரு. சண்முகானந்த சுவாமிகளவர்கட்கு நமது உளங்கனிந்த வணக்கமும் நன்றியும் உரியது.

